19th August 1960]

**Sri P. G. MANICKAM :** தற்போது மேற்கொண்டு ஸ்டால்கள் தேவை என்று எத்தனை முனிசிபாலிடிகளும் பஞ்சாயத்துக்களும் சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கின்றன? அவைகளுள் 1960-61-ம் ஆண்டில் எத்தனை ஸ்டால்களை எடுத்து நடத்த சர்க்காருக்கு திட்டம் இருக்கிறது?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON :** கொடுத்திருக்கும் கேள்வி கோயமுத்தூர் ஜில்லாவைப் பொறுத்த அளவில் உள்ளது. அதற்குள்ள பதிலைக் கொடுத்திருக்கிறேன். வேறு தகவல் வேண்டுமென்றால் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Over-head tanks*

* 315 (ஈ) *Q.*—**Sri S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) வட ஆர்க்காடு மாவட்டம், போளூர் தாலூகா, கடலாடி, குன்னத்தூர், குருவிமலை, நாரணமங்கலம் ஊராட்சி மன்றங்களிடமிருந்து 13—7—1959-ல் குடிதண்ணீருக்காக "ஓவர் ஹெட் டாங்குகள்" கட்ட கோரி மகசர்கள் வந்தனவா?

(ஆ) அப்படியானால், அவைகளின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** (அ) & (ஆ) The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

**Sri S. M. ANNAMALAI :** இந்தத் திட்டம் தீட்டும்போது காம்ப்ரெஹென்ஸிவ் ஸ்கிமில் திட்டப்படுமா? அல்லது தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின் கீழ் எடுப்பதற்கு சர்க்கார் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறதா? பஞ்சாயத்து போர்டுகளிடம் போதிய பணம் இல்லாததால், தேசிய குடி தண்ணீர்த் திட்டத்தின கீழ் இந்தத் திட்டங்களை சாங்ஷன் செய்ய சர்க்கார் முன்வருமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** அந்தத் தகவல் எல்லாம் என்னிடத்தில் இல்லை. தகவல் கேட்டிருக்கிறோம். வந்ததற்குப் பிற்பாடு சொலகிறோம்.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** உயர் நிலைத் தண்ணீர்த் தொட்டிகளைக் கட்டிவிட்ட பிறகு, 'தண்ணீர் சுகாதார மான முறையில் இல்லை' என்று சொல்லப்பட்டு. எலெக்ட்ரிக் பம்ப் செட்டுக்குக் கனெக்ஷன் கொடுக்க மறுக்கப்படுகிறது. ஏற்கெனவே கட்டப்பட்டிருக்கும் தொட்டிகளைப் பொறுத்த வரையில், சட்டத்திலிருந்து விதி விலக்குக் கொடுத்து உத்தரவு அனுப்பப்படுமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** தண்ணீர்த் தொட்டி கட்டுவதற்கு முன்னாலேயே, அங்கு கிடைக்கும் தண்ணீர் சுகாதார முறைப்படி சுத்தமான தண்ணீரா என்று பார்த்துத்தான் கட்டுவது உண்டு. அப்படி இல்லாமலும் கட்டிவிடுகிறார்கள்.

இருந்தாலும், அந்தப் பகுதியில் அதைவிட மோசமான தண்ணீர் இருக்கிற காரணத்தால், அந்த விதியைத் தளர்த்தலாம் என்ற யோசனை அரசாங்கத்திற்கு இருக்கிறது.

**Sri M. R. Kandaswami Mudaliyar** : பர்மிஷன் இல்லாமல் செய்ததற்கு தடைகள் போடுவதானால் சரி, இந்த உத்தரவுகள் வருவதற்கு முன்னால், கட்டப்பட்ட தொட்டிகளுக்கு இப்பொழுது விதிவிலக்கு கொடுக்கலாம் என்பதை சர்க்கார் கவனிக்க முடியுமா? வீணாக ரூ. 10,000 வரை செலவு செய்தது வெறுமனே கிடக்கிறது. அங்கு நல்ல தண்ணீரும் இல்லாததால் அதை உபயோகிக்க அனுமதி கொடுக்கும் உத்தேசம் உண்டா?

**The Hon. Sri M. A. Manickavelu** : விதிகளைத் தளர்த்துவதாக உத்தேசம் என்றுதான் சொன்னேன். இந்தத் தண்ணீர் நல்லதாக இல்லாவிட்டாலும், அங்கு இருக்கும் குளம், குட்டைகளிலுள்ள தண்ணீர் மோசமானதாக இருப்பதால், இந்தத் தண்ணீரே மேல் என்ற வகையில், விதியைத் தளர்த்தலாம் என்று உத்தேசம்.

*No confidence motion on the Panchayat Board Presidents*

* 315- (உ) *Q.*—**Sri S. M. Annamalai** : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1958-ம் ஆண்டு பஞ்சாயத்து சட்டப்படி 1960-ல் எத்தனை பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் மீது நம்பிக்கை இல்லாத தீர்மானங்கள் நிறைவேறின?

(ஆ) எத்தனை அங்கிகரிக்கப்பட்டன ? எப்போது ?

**The Hon. Sri C. Subramaniam** : (*a*) In 1960, no-confidence motions were passed under the Madras Panchayats Act, 1958, against the Presidents of Orathur, Thenampadugai Panchayats in the Thanjavur district and Melpallipattu, Alagusanai and Sayanavaram Panchayats in the North Arcot district.

(*b*) The matter is under examination.

**Sri S. M. Annamalai** : ஸார், இந்த பஞ்சாயத்துச் சட்டம் எப்பொழுது அமுலுக்கு வந்தது? இந்த நம்பிக்கை இல்லாத் தீர்மானங்கள் எப்பொழுது நிறைவேற்றப்பட்டன? அதற்கு உண்டான விதிகள் சரியாக இல்லாததால்தான் இப்படி வந்தது என்பது உண்மையா? அப்படியானால், அதை ஏன் சர்க்கார் உடனடியாகச் சரி செய்யவில்லை?

**The Hon. Sri C. Subramaniam** : இதிலே ஒரு சின்ன சட்டச் சிக்கல் இருக்கிறது. 1950-ம் ஆண்டு ஆக்ட் பிரகாரம், "நோ-கான்ஃபிடென்ஸ் மோஷன்" போட இடமில்லை; 1958-ம் ஆண்டு ஆக்ட் படி அப்படி இடம் இருக்கிறது. 1950-ம் ஆண்டு சட்டப் பிரகாரம் எலெக்ஷன் நடந்திருந்தால், அந்த பிரசிடென்ட் மேல் இந்த "நோ-கான்ஃபிடென்ஸ் மோஷன்" கொண்டுவரலாமா